உ

# ஜீவரத்தினம்










ப. இரத்தின நாய
திருமகள்விலாச அச்சியந்திரசாலை,
சென்னை.

இதன் விலை] 1934. [அணா 1.

உ

கடவுள் துணை

# ஜீவரத்தினம்

நேரிசை - வெண்பா

தன்னைத்தா னுணராத தாரொளித்த மானிடர்க்கு
என்னத்தான்சொல்வே னெங்கோவே-உன்னைத்தான்
தானென் பாரோ தானுரோ நீயாரோ
நானென்னும் பேரே நவில்.

விருத்தம்

மனிதரென்றால் திறமையுடன் பொறுமைவேண்டும்
மனிதரென்றால் மன்னுயிர்போல்கருணைவேண்டும்
மனிதரென்றால் பேச்சுநிலை யுறுதிவேண்டும்
மனிதரென்றால் மறைவிதிகள் மனதில்வேண்டும்
மனிதரென்றுங் குருவாணை செலுத்தவேண்டும்
மனிதரென்றால் உபகாரப் பெருமைவேண்டும்
மனிதரென்றால் இத்தகையோர் மனிதராகும்
மற்றவரை மனிதரென்று மறைசொல்லாதே. 1

செய்தநன்றி மறவாதான் மனிதனாகும்
சொன்னசொல் தவறாதான் மனிதனாகும்
கைதவஞ்சற் றுள்ளவனே மனிதனாகும்
கடவுளென்ற பயமுடையோன் மனிதனாகும்

பொய்மொழியை நீத்தவனே மனிதனாகும்
புண்ணியங்கள் பூத்தவனே மனிதனாகும்
வையமிசை யடக்கமுள்ளான் மனிதனாகும்
வாய்மதத்தோர் மிருகமென வழுத்தலாமே. 2

சிவ-காயமேயிது பொய்யடா
காத்தடைந்த பையடா
மாயனார்குயவன் செய்த
மண்ணுபாண்டம் ஓடடா காயமே

உப்புமண்ணும் ஓட்டை மூங்கில்
ஒட்டிவைத்த கூடடா
உளுத்தநரம்பும் வெளுத்ததோலும்
இழுத்துக்கட்டிய கூடடா காயமே

குப்பைகீரை முளைத்ததுபோல்
கூடுகட்டின காடடா
கொழுந்நரம்பும் புழுத்ததோலும்
இழுத்துக்கட்டின கூடடா காயமே

மனமேயிந்தக்காயமீதில்
ஒன்பதுகோட்டை வாசலடா
வெந்தசோறும் நொந்தகாய்கள்
போட்டைத்தபையடா காயமே

புனல்களூறும் கேணியடா
பொய்நிறைந்த வீடடா

காலையில் குளியாவிட்டால்
நாற்றம்வீசும்ஓடடா காயமே
அஞ்சுபஞ்சபூதமேயிதில்
அல்லும்பகலும்வாசமே
ஆறுகாடிதுஷ்டபுலிகள்
போருசெய்திடும்வாசமே காயமே
பந்துபோல்குதித்திடுமிவர்
பாசமேயிவர்நாசமே
எங்கள்குருபாதம்போற்றி
எடுத்துரைத்தகாயமே காயமே
அத்திமரத்தின்கனியைப்போல்
ஆடுமேஒருஸ்தூலமே
தட்சணத்தில்வேடாமலே
தண்டெடுப்பதுமுன்னமே காயமே
தஞ்சைநகரில்வாழுகின்ற
தவனிலையைப்பாருமே
தம்பிமுனிசாமிசொல்லை
தடையில்லாமல்கேட்பீரே காயமே

விருத்தம்

இப்பவோபின்னையோ சற்றுநேரத்திலோ
இரவுதான்படுநேரமோ இரவிலோபகலிலோ
உதயகாலததிலோ எந்தெந்தவேளைதனிலோ
அப்பிலோதீபிலோ நாயிலோபேயிலோ

அரவுதான்பெருமிடியிலோ அருதபுண்ணிலோ
நடநோய்தன்னிலோ ஆயுதங்களினாலேயோ
செப்பெரியவீட்டிலோ காட்டிலோயென் னுயிர்
பிரிந்திடும் நடராஜனே.

## ஆனந்தக்களிப்பு

மானிடமென் றுவந்தீரே-மண்மேலே
எத்தனைநாளிருப்பீரோ சொல்வீரே மா

காணியுனக்குண்டுவேறே-அற்ப
கனவுக்குநிகரான வாழ்வானதாலே
துணிவுகொண்டன்னியர்மேலே தினந்
தொந்தரைசெய்யாதே நரகம்போய்யாதே மா

ஏழைவயிறெரிக்காதே-கடவுள்
இட்டதின்மேலே பேராசைகொள்ளாதே
பாழும்பணத்தை நம்பாதே-நீ
பாடையில்போகையில் கூடவாராதே மா

ஏழுமதில்பத்துசிரசும்-கொண்ட
ராவணன்செங்கோல் அவனுடையவரசும்
தாழாமல்நின்றுதா வரையும்-வீணாய்
தானென்றுதுள்ளாதே சீக்கிரமழியும் மா

கல்லாயிரும்பா வுன்னுடம்பு-கலி
யுகமட்டுமழியாத வரமுண்டோசொல்லு

புல்லாகிலும் உதவியுண்டு-சுத்த
பொற்றள்ளவலகைநீ நல்லவழிநில்லு மா

சூரியனும் நூறுபிறவி-அவன்
துரைத்தனம்செங்கோலு முடியுமாகூறி
பெரியோர்மனம்நோகச்சீறி-அவன்
பூண்டோடொழிந்தானே அனியாயப்பாவி மா

இரணியனென்றபேர் சொன்னுல்-வானே
ரெல்லோரும்பணிவிடை செய்தாரே அன்னுள்
கெருவத்தைமேற்பூண்டதினு-லவன்
கிழியுண்டொருக்ஷண காலத்தில்மாண்டான் மா

தெய்வமிருக்குதென் றெண்ணு-உனக்கு
தீங்குசெய்வோர்க் குபகாரம்பண்ணு
பொய்மொழிவிஷமென்று எண்ணு-உனக்கு
போஜனமிட்டாரை பூசைகள்பண்ணு மா

ஆயிரத்தெட்டண்டமொன்ருய்-அந்த
ஆண்டசூரபத்ம னவனெங்கேநின்ருன்
பாவியென்றநாமங்கொண்டோர்.கெதியை
பாடினுலுந்தோஷந்தொடருமே கண்டாய் மா

ஆசைக்கனேகஞ் சொல்லாதே-கனவை
யானபிறகு தோஷஞ்சொல்லாதே
மோசக்கருத்துக் கொள்ளாதே-திரு
மாதுமுன்னிற்காமல் பறந்துபோவாளே மா

நீயேபிழைக்க வெண்ணுதே-பிறர்க்கு
நேற்றுசொன்னசொல்லை மறந்துபோகாதே
நானேவீரனென் றெண்ணுதே
நடுவானகடவு ளழித்திடுவாரே மா

தன்னைத்தானே புகழாதே-சற்றுந்
தாழ்ந்தவர்மீதினி விழிவுசொல்லாதே
என்னல்பிழைத்தானென் றெண்ணுதே-நம்
எல்லார்க்குங்கடவு ளிருக்கின்ருர்மேலே மா

இழிவாகப்பிறரைச் சொல்லாதே-கையில்
இருக்கும்பொருளைநம்பி கெருவங்கொள்ளாதே
ஒழியாமலிருந்தவ ரில்லை-அடா
உனக்குமாத்திரமென்ன கெடுவுண்டாயில்லை மா

பிறர்தொழிலைக் கெடுக்காதே-உன்
பெண்சாதிபிள்ளைபோல் அவனுக்குமுண்டே
அறநெறியை விடுக்காதே-நமது
ஆண்டவன்கோபத்திற் காளாய்க்கெடாதே மா

மன்னுதிமன்னரை யெல்லாம்-இந்த
மண்ணுண்டுபோச்சுதே உன்னுடல்பொன்னு
தன்னுலேயாவது யென்னு-கடவுள்
தன்செயலன்றி யறியுமோஅண்ணு மா

படிப்பவரெல்லாம் பெரியோர்-இதின்
பயனறிந்தோரெல்லாம் மோட்சத்துக்குரியோர்

படியாதவரெல்லாம் கெடுவார்-உடல்
தன்னைமதித்தபேர் நரகத்துக்குடையோர் மா

விருத்தம்

பணந்தேடி யாரிருந்தார் உலகமீதில்
பாவிதிரி யோதிரனும் பாட்டனும்
குணமான துரோணரவர் கர்ணன் பூரி
கூறியதோர் தேத்தரசன் சகுனிசல்லியன்
பிணமானர் அர்ச்சுனன்கை அம்பினலே
பெண்டீரும் பணங்காசும் பிறகேபோச்சோ
மணமான வாழ்வுபொருள் ஆடுமாடும்
மாய்கையடா பொம்மலாட்டம் மதித்துப்பாரே.

ஆனந்தக்களிப்பு

உன்னையேநீயெண்ணிப்பாரு-இந்த
உலகத்திலெதுசொந்தம் யோசித்துக்கூறு

அன்னைக்கருவிந்து நாதம்-கொண்டு
ஆடுமுடலுக்கு மண்ணென்னபேதம்
பின்னைவளர்த்திடும் சாதம்-இடை
பின்கலைசுவாசம் தடைப்பட்டால்மோசம் உன்

தாயுந்தகப்ப னிரவல்-அன்று
தாலிகட்டிக்கொண்ட பெண்டீருமிரவல்
சேயும்பொருளு மிரவல்
ஜெகமெட்டுதிக்குஞ் செங்கோலுமிரவல் உன்

சோலையும்வாவியு மிரவல்-நல்ல
சொகுசானகட்டட மாளிகையுமிரவல்
வேலைவெகுபூச்சு மிரவல்-இந்த
மெத்தவதிகார உத்தியோகமிரவல் உன்

அண்ணனுந்தம்பி யிரவல்-உந்தன்
ஆசைக்கொழுந்தியு மாமியிரவல்
கண்ணுக்குப்புருவ மிரவல்-உந்தன்
கையில்பவுத்திர மோதிரமிரவல் உன்

பெட்டியும்பேழை யிரவல்-பிறர்
காணுமல்சேர்க்கும் பணமுமிரவல்
கட்டியசோம னிரவல்-நாளை
கட்டிக்கொண்டுபோகும் பாடையிரவல் உன்

தோப்புந்தடாக மிரவல்-உனக்கு
துரைத்தனத்தார்தந்த மானியமிரவல்
காப்புகொலுசு மிரவல்-நாளை
காஷ்டத்திலெண்சா னிடமுமிரவல் உன்

பாயுந்தலையணை யிரவல்-நல்ல
பட்டுப்பட்டாவளி சேலையிரவல்
தோயுஞ்சுகந்த மிரவல்-தினம்
தோத்திரஞ் செய்திடும் மந்திரமிரவல் உன்

தாலிச்சரடு மிரவல்-தீட்டும்
தலைக்கெண்ணெய்சாந்துமை பொட்டுமிரவல்
மாலைச்சாடு மிரவல்-தீட்டும்
மஞ்சளுங்குங்குமம் தானுமிரவல் உன்

தங்கநகையு மிரவல்-தரை
தன்னிற்புதைத்த புதையுமிரவல்
செங்கைவளையு மிரவல்-தந்த
சீப்புசிக்கங்கோல் சவுரியிரவல் உன்

பஞ்சணைமெத்தையு மிரவல்-இந்த
பாழான கட்டைக்கு வாசனையிரவல்
மிஞ்சியவரைஞாண் கயிறுமிரவல்
மினுக்குங்கடுக்க னுடுப்புமிரவல் உன்

தண்டைசதங்கையு மிரவல்-மற்ற
தாவடம்வாசனை பூவடமிரவல்
கொண்டைமினுக்கு மிரவல்-நாளை
கூட்டிக்கொண்டுபோகும் சங்குமிரவல் உன்

## கீர்த்தனம்

இராகம்-இந்துதானி-ஏகதாளம்

பல்லவி

மலைத்துமலைத்துடலை மதிக்கிருய்நெஞ்சே
மதியமுதுண்டவன்போல் களிக்கிருய்பஞ்சே

சரணங்கள்

சிலையாயிரும்பா செம்பாவுன் னுடம்பு
சீச்சீயிருகலையின் காற்றடங்கினல்வம்பு
வலைபோலவுடலெங்கும் வழிசிறுநரம்பு
வைத்துபின்னியசொத்தைதகட்டைக்காகவாதெம்பு ம
கட்டுமரத்தைநம்பி கடலிலிழிந்தவன்போல்
கலங்குதேபிராணனுந்நுள் காற்றின் துரும்பைபோல
கெட்டுபோகாதேசொன்னேன் கெடுவிளைமண்மேலே
கிடத்திகொளுத்துமுன்னே கழிக்காதேவீணளே ம
காமாதியசுகத்தில் கடத்துகிருய்தினத்தை
காலன் தினமெடுத்து பார்க்கிருன்கணக்கை
தாமதித்திருக்காதே தன்னுதென்றுபிணத்தை
தையலர்க்கிடுசரக் காமிந்தபிணத்தை ம
பணம்பொருளாஸ்தியின் பாதைவராது
பாவபுண்ணியங்களை மட்டும்விடாது
பிணமாகும்போதுயிரைப் பிடிப்பவரே து
பிள்ளையெல்லாம்சுடலை தாண்டிவராது ம
அருணையம்பதிவளர் அற்புதசோதி
அயன்மால்தேடிடுங் கரையிலாவாதி
சிறுமணவூர்முனி சாமிசொல்நீதி
ஜெகத்துளோர்க்கெவ்வித மோயிந்தசேதி ம

இராகம்-கண்ணிகள்

ஆக்கையுன்னுதோ அல்லவென்றுல்
ஆவியுன்னுதோ

ஆக்கையுன்னுடெதென்று யாருஞ்சொல்லவில்லை
காக்கைகழுகுநரி காக்கின்றதேதொல்லை ஆக்கை

புத்திருன்னுடையதோ பலபலவாம்
பொருள்களுநன்னுடையதோ
புத்திரருன்னுடெதென்று புகழ்ந்திருக்குங்காலை
சுத்திகுடமுடைத் தோடுமதேவேலை ஆக்கை

வீடுமுன்னுதோ தேடும்பொருள்
விருதுமுன்னுடையதோ
வீடுமுன்னுடையதெனும் வீம்பேனிப்பொய்நாட்டில்
கூடும்ஜனம்நாளை கொளுத்துஞ்சுடிகாட்டில் ஆக்கை

இன்னமுஞ்சொல்லவோ உன்னிலைதான்
உணரவில்லையோ
பன்னுந்தமிழ்ப்பா வலர்களாடிப்பாடி
இன்னுஞ்சிறுவன் முனிசாமிசொற்படி ஆக்கை

தெலுங்கு கீர்த்தனை

உத்ததிராயித்திரேகம்-மன
ஊரிகிராராபோத்தாம்
தாரிலோபலதையாலுந்தி
காடுகராராதிடுகபோதாம் உத்

சக்கியமாயலசேதா-மன
சிதாராமுனிநாதா உத்

என்னடிகன்னபொய்யெதென்ன
சக்ககராராசிக்கினசாமி உத்
ஆலுபில்லலெவருரா
ரெவருராமனக்கு உத்
அங்கடிபோதிமி தொங்கடிதெஸ்திமி
தொங்கலுவொச்சி தோசுகபொய்யதி உத்
கோடகோடகோடமன
ரங்கடுநிலசினகோட உத்
வச்சிரதேகமு இச்சிரதானமு
வெச்சரிநீயோ தாரகநாமமு உத்
ஜீவரத்தினம் முற்றிற்று.

---

## பட்டினத்தார் உடற்கூற்றுவண்ணம்

தன தன தான தன தன தான
தந்த தனந்தன தந்த தனந்தன
தனன தனந்த தனன தனந்த
தானன தானன தானன தந்த
தந்ததன தான தன தானன—
ஒருமடமாது மொருவனுமாகி
இன்பசுகந்தரு மன்புபொருந்தி
உணர்வுகலங்கி யொழுகியவிந்து
ஊறுசுரோணித மீதுகலந்து
பனியிலோர்பாதி சிறுதுளிமாது
பண்டியில்வந்து புகுந்துதிரண்டு

பதுமவரும்பு கமடமிதென்று
பார்வைமெய்வாய்செவி கால்கைகளென்ற—
ஒருவமுமாகி யுயர்வளர்மாத
மொன்பதுமொன்று நிறைந்துமடந்தை
யுதிரமகன்று புவியில்விழுந்து
யோகமும்வாரமு நாளுமறிந்து—
மகளிர்கள்சேனை தரவணையாடை
மண்படவுந்தி யுதைந்துகவிழ்ந்து
மடமயில்கொங்கை யமுதமருந்தி
யோரறிவீரறி வாகிவளர்ந்து—
ஒளிநகையூற விதழ்மடவாரும்
வந்துமுகந்திட வந்துதவழ்ந்து
மடியிலிருந்து மழலைமொழிந்து
வாவிருபோவென நாமம்விளம்ப—
உடைமணியாடை யரைவடமாட
வுண்பவர்தின்பவர் தங்களொடுண்டு
தெருவிலிருந்து புழுதியளைந்து
தேடியபாலரொ டோடிநடந்து—
அஞ்சுவயதாகி விளையாடியே.

உயர்தருஞான குருவுபதேச
முத்தமிழின்கலை யுங்கரைகண்டு
வளர்பிறையென்று பலரும்விளம்ப
வாழ்பதினாறு பிராயமும்வந்து—
மயிர்முடிகோதி யறுபதநீல

வண்டிமிர் தண்டொடை கொண்டைபுனைந்து
மணிபொனிலங்கு பணிகளணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க—
மதனசொரூப னிவனெனமோக
மங்கையர்கண்டு மருண்டுதிரண்டு
வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில்போலவர் போவதுகண்டு—
மனதுபொறும லவர்பிறகோடி
மங்கலசெங்கல சந்திகழ்கொங்கை
மருவமயங்கி யிதழமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி
ஒருமுதலாகி முதுபொருளாயி
ருந்ததனங்களும் வம்பிலிழந்து
மதனசுகந்த விதனமிதென்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து
வளமையுமாறி யிளமையுமாறி
வன்பல்விழுந்திரு கண்களிருண்டு
வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து
வாதவிரோதகு ரோதமடைந்து
தசங்கையினிலோர் தடியுமாகியே. $\frac{1}{2}$

வருவதுபோவ தொருமுதுகூனு
மந்தியெனும்படி குந்திநடந்து
மதியுமழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமற் விடாமன்மொழிந்து—

துயில்வருநேர மிருமல்பொருது
　　தொண்டையுநெஞ்சு முலர்ந்துவறண்டு
துகிலுமிழந்து சுணையுமழிந்து
　　தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு—
கலியுகமீதி லிவர்மரியாதை
　　கண்டிடுமென்பவர் சஞ்சலமிஞ்ச
கலகலவென்று மலசலம்வந்து
　　கால்வழிமேல்வழி சாரநடந்து—
தெளிவுமிராம லுரைதடுமாறி
　　சிந்தையுநெஞ்சு முலைந்துமருண்டு
திடமுமுலைந்து மிகவுமலைந்து
　　தேறிநலாதர வேதெனநொந்து—
மறையவன்வேத னெழுதியவாறு
　　வந்ததுகண்டமு மென்றுதெளிந்து
இனியெனகண்ட மினியெனதொந்த
　　மேதினிவாழ்வு நிலாதினிநின்ற—
கடன்முறைபேசு மெனவுரைநாவு
　　றங்கிவிழுந்துகை கொண்டுமொழிந்து
கடைவழிகஞ்சி யொழுகிடவந்து
　　பூதமுநாலு சுவாசமுநின்று—
நெஞ்சுதடுமாறி வருநேரமே. 34

வளர்பிறைபோல வெயிறுமுரோம
　　முஞ்சடையுஞ்சிறு குஞ்சியும்விஞ்ச
மனதுமிருண்ட வடிவுமிலங்க

மாமலைபோல்யம தூதர்கள் வந்து
வலைகொடுவீசி யுயிர்கொடுபோக
மைந்தரும்வந்து குனிந்தழநொந்து
மடியில்விழுந்து மனைவிபுலம்ப
மாழ்கினரேயிவர் காலமறிந்து—
பழையவர்காணு மெனுமயலார்கள்
பஞ்சுபறந்திட நின்றவர்பந்த
ரிடுமெனவந்து பறையிடமுந்த
வேபிணம்வேக விசாரியுமென்று—
பலரையுமேவி முதியவர்தாமி
ருந்தசவங்கழு வுஞ்சிலரென்று
பணிதுகிெருங்கல் களபமணிந்து
பாவகமேசெய்து நாறுமுடம்பை—
வரிசைகொடாம லெடுமெனவோடி
வந்திளமைந்தர்கு னிந்துசுமந்து
கடுகிநடந்து சுடலையடைந்து
மானிடவாழ்வென வாழ்வெனநொந்து
விறகிடைமூடி யழல்கொடுபோட
வெந்துவிழுந்து முறிந்துநிணங்க
ளுருகியெலும்பு கருகியடங்கி
யோர்பிடிநீர்மி லாதவுடம்பை
நம்புமடியேனை யினியாளுமே.



திருமகள் விலாசம் பிரஸ், சென்னை:—1934.

# சங்கீத சாஹித்திய சந்தவன்னணச் சரபம்

## ச. சு. சங்கரலிங்கக் கவிராய ரியற்றிய

| புதிய டிராமா சரித்திரங்கள் | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| கோவலன் சரித்ரம் [நாடக ரஞ்சிதம் மலர் | 1] | 0 | 6 | 0 |
| நல்லதங்காள் சரித்திரம் ,, ,, | 2 | 0 | 6 | 0 |
| லவிதாங்கி சரித்திரம் ,, ,, | 3 | 0 | 6 | 0 |
| ஸ்ரீ பாமா விஜயம் ,, ,, | 4 | 0 | 6 | 0 |
| பாதுகா பட்டாபிஷேகம் ,, ,, | 5 | 0 | 6 | 0 |
| ஸ்ரீ ராமதாஸ் சரித்திரம் ,, ,, | 6 | 0 | 6 | 0 |
| தூக்கு தூக்கி சரித்திரம் ,, ,, | 7 | 0 | 6 | 0 |
| சத்தியவான்-சாவித்திரி ,, ,, | 8 | 0 | 6 | 0 |
| நந்தனர் சரித்திரம் ,, ,, | 9 | 0 | 6 | 0 |
| ஷை 9-சரித்திரங்கள் ஒரே கட்டடம் காலிகோ பைண்டு செய்தது "நவ நாடக ரஞ்சிதம்" | | 3 | 0 | 0 |
| சகுந்தலா [நவநாடக ரத்னம் மலர் | 1] | 0 | 6 | 0 |
| காலவரிஷி ,, ,, | 2 | 0 | 6 | 0 |
| சிறுத்தொண்டன் ,, ,, | 3 | 0 | 6 | 0 |
| மார்க்கண்டேயர் ,, ,, | 4 | 0 | 6 | 0 |
| குலேபகாவலி ,, ,, | 5 | 0 | 6 | 0 |
| பீஷ்மர் பிரதிக்ஞை ,, ,, | 6 | 0 | 6 | 0 |
| சக்குபாய் ,, ,, | 7 | 0 | 6 | 0 |
| காளிதாஸ் ,, ,, | 8 | 0 | 6 | 0 |
| துருவ சரித்திரம் ,, ,, | 9 | 0 | 6 | 0 |
| ஷை 9-சரித்திரங்கள் ஒரே கட்டடம் காலிகோ பைண்டு செய்தது "நவ நாடக ரத்னம்" | | 3 | 0 | 0 |

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ. 41, வெங்கடராமய்யர் தெரு, ஜி. டி. சென்னை.